Registered No. M. 2330 'SIDDHANTHAM
Vol. 33—No. 10



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

| மலர் 33 | சார்வரி ஐப்பசி 1960 அக்டோபர் | இதழ் 10 |
|---|---|---|

உள்ளுறை பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.
உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி
சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4
ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

# செய்திச் சுருக்கங்கள்

வார வழிபாடு : கோலியனூர் வாலீஸ்வர ஸ்வாமி திருக்கோயிலில் 5-9-60 திங்களன்று, கோலியனூர்த் தமிழ்மறை வார வழிபாட்டுச் சிவநெறிக் கழகத்தின் மூன்றும் ஆண்டுவிழா, வித்துவான் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் தலைமையிற் சிறப்புற நடந்தது. திருவாளர்கள் - வித்துவான் சுந்தரேச வாண்டையார், வித்வான் ச. சேதுசுப்பிரமணியம் முதலிய அறிஞர் பெருமக்கள் சொற்பொழிவாற்றினர். தலைவர் அவர்களைத் திருக்கோயில் அறங்காவலர்களும் ஊர்ப்பொதுமக்களும் பூர்ண கும்ப மரியாதைகளுடன் வரவேற்றனர். சுற்றுப்புற ஊர்களில் இருந்து பெருந்திரளான மக்கள் வந்து கலந்து கொண்டனர். செயலாளர் திரு. ச. பாலசுப்பிரமணியம் பிள்ளை அவர்கள் நன்றியுரை நவின்றார்.

குருபூசை : ஸ்ரீ அருள் நந்தி சிவாச்சாரிய சுவாமிகளின் குருபூசை விழா, 20-9-60 செவ்வாயன்று, தியாகராயநகர்த் தருமையாதீன நிலையத்தில் இராவ்சாகிப் திரு. நல். முருகேச முதலியார், அவர்கள் தலைமையில் நன்கினிது நடைபெற்றது. செஞ்சொல் மாமணி திரு. ச. சிவகுமாரனார் எம்.ஏ. அவர்களும், தருமையாதீனப் புலவர் திரு. சி. அருணைவடிவேல் முதலியார் அவர்களும் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றிச் சிறப்பித்தனர்.

சித்தாந்த சைவ மாநாடு : திருவெண்ணெய் நல்லூரில் 30-9-60 வெள்ளியன்று, திருவாவடுதுறை ஆதீனத்தின் சார்பில் 9-வது சித்தாந்த சைவ மாநாடு நமது சமாஜத் துணைத்தலைவர் இராவ்சாகிப் திரு. நல். முருகேச முதலியார், பி.ஏ. அவர்களின் தலைமையிற் சீரிய முறையில் நிகழ்ந்தது. ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களும் எழுந்தருளியிருந்து சிறப்பித்தார்கள். ஆதீன மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் வரவேற்புரை கூறினார்கள். பேராசிரியர் திரு. ஜி. சுப்பிரமணிய பிள்ளை, எம்.ஏ.,பி எல்., திரு. தே. ஆ. ஸ்ரீநிவாசாசாரியார், திரு. கே. ஆறுமுக நாவலர் ஆகிய பேரறிஞர்கள் முறையே ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, ஆன்மலாபம் என்னும் அரிய பொருள்கள் பற்றி விரிவுரை ஆற்றினர். சன்மார்க்க சித்தியாரும் சிவாச்சிரமத் தெளிவும் உரையுடன் வெளியிடப்பட்டன.

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு

| மலர் 33 | சார்வரி ஐப்பசி 1960 அக்டோபர் | இதழ் 10 |
|---|---|---|

## நியாயங்கள்

(முருகவேள்)

(மலர் - 33 ; இதழ் - 9 ; 271-ம் பக்கத் தொடர்ச்சி)

கட்டகுடிப் பிரபாத நியாயம் : இதனைச் சிவஞான சுவாமிகள் " சுற்றிப் போயும் சுங்கத் துறையில் வந்து கூடிய முறைமை" என்பர். "இறைவனுக்கு ஐந்தொழில் செய்தல் இலக்கணம் எனின், சிலரை வாழ்வித்தும் சிலரைத் தாழ்வித்தும், சிலரைத் துறக்கத் துய்த்தும் சிலரை நரகத் துய்த்தும், சிலரை உயர்ந்த சாதியிற் பிறப்பித்தும் சிலரை இழிந்த சாதியிற் பிறப்பித்தும், சிலருக்கு ஆயுளை நீட்டிப்பித்தும் சிலருக்குக் குறைப்பித்தும், இவ்வாறு ஐந்தொழில் செய்வான் எல்லா உயிர்களையும் ஒப்ப நோக்காமையும் அருளின்மையும் உடையவனாவான் எனப்பட்டு இறைமையிலக்கணம் வழுவாய் முடியும் ; அற்றன்று, அவரவர் செய்த வினைக்கேற்பவே அவ்வாறு இறைவன் ஐந்தொழில் செய்யாநிற்பன் எனின், இருவினைக்கு முதன்மையன்றி அவற்றின் வழிநின்று ஐந்தொழில் செய்யும் இறைவனுக்கு முதன்மையில்லை எனப்பட்டு மீளவும் வழுவாய் முடியும் ; இது 'சுற்றிப் போயும் சுங்கத் துறையில் வந்து கூடிய முறைமை'த் தாலோ என்னும் ஆசங்கையை நீக்குதற்கு ஆணையின் என்றார்" என்பது சிவஞானபோதப் பேருரை.

மயூர நிருத்தன நியாயம்: இதனைச் சிவஞான சுவாமிகள் "மயிற்கூத்தின் முறைமை" என்பர், மயூரம் - மயில். நிருத்தனம் - நடனம், கூத்து. "அற்றேல், வினையுண்டெனக் கொள்ளின், அதுவே அமையும்; முதல்வன தன்மை பெறப்படாது. முதல்வன் உண்டெனக் கொள்ளின், அவனே அமையும்; வினையுண்மை பெறப்படாது; இரண்டுங் கோடல் மிகையாகலான் என, ஒரு தாள் ஊன்றி ஒரு தாளைத் தூக்கி நின்று ஆடும் மயிற் கூத்தின் முறைமைத்தாகும் என்னும் ஆசங்கையை உவமை முகத்தான் மறுத்து மேற்கோளைச் சாதித்தற்கு, 'ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவலிட் டாங்கு அவை அவனது ஆக்கினை யாகலான்' என ஏதுக் கூறினார்" என்பது சிவஞான போதப் பேருரை.

காக தாலிய நியாயம்: தாலம் - பனை. இதனை ,' Post hoc ergo propter hoc" என மேலைநாட்டினர் வழங்குவர். "காக்கை ஏறப் பனம்பழம் விழுந்தது போல" என இதனை உலக வழக்கிற் கூறுவர். காக்கை ஏறியது பனம் பழம் விழுந்தமைக்குக் காரணம் அன்று. காக்கை ஏறிய நேரமும் பனம்பழம் விழுந்த நேரமும் ஒன்றுதல் பற்றிக் காக்கை ஏறியதுதான் பனம்பழம் விழக் காரணமோ என மயங்குதல். இதனைத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் தாம் பாடிய திருவேங்கைக் கோவையில் "மெய் தொட்டுப் பயிறல்" என்னும் துறையாகப் பின்வரும் பாடலில் அழகுற அமைத்துள்ளார்.

"மன்னிசை வெங்கை யுடைய பிரான்வரை மால்நுசுப்பைப்
பொன்னிசை கொங்கை ஒடித்திடின்,நிந்தை பொருந்தும்நுமை;
மின்னிசை மென்குழல் ஏறன்மின் நீவிர்! விளங்கிலிரோ
இன்னிசை வண்டினங் காள்காக தாலியம் என்பதுவே"

சூசிகடாக நியாயம்: சூசி - ஊசி. கடாகம் - கொப்பறை. ஒரு கொல்லனிடத்து ஊசியும் கடாகமும் செய்யப் பணித்துப் பொருள் கொடுக்க, அக்கொல்லன் கடாகம் செய்தற்குரிய கூலியை முன்னரும், ஊசி செய்தற்குரிய கூலியைப் பின்னரும் பெற்றுக் கொண்டிருந்தானாயினும், பெருவேலை

யாதலின் கடாகத்தினைக் காலந் தாழ்த்துப் பின்னரும், சிறு வேலையாதலின் ஊசியைக் காலம் தாழ்த்தாமல் முன்னரும் கொடுப்பது போல்வதொரு முறைமை. பிரமாணங்களின் இலக்கணம், பொருள்களின் இலக்கணம் என்னும் இரண்டினுள், பின்னையது சுருங்கியதாதல் பற்றி, எடுத்துக்கொள்ளப் பெற்ற பிரமாணங்களின் இலக்கணத்திற்கும் முன்னர்,

> "அன்னிய சாதி யும்தன் சாதியும் அகன்று நிற்றல்
> தன்னியல்பு; அன்னி யத்தைத் தவிர்ந்துதன் சாதி கொத்தல்
> துன்னிய பொதுஇ யற்கை; சொன்ன இவ் விரண்டி னுள்ளே
> மன்னிய பொருள்கள் யாவும் அடங்கிடும் மானம் உற்றால்"

எனச் சிவஞான சித்தியார் அளவையியலில், பொருள்களின் இலக்கணம் முன்னர் உணர்த்தப் பெறுவது, சூசிகடாகம் என்னும் நியாயம் ஆகும்.

தேட்கடிக்கு அஞ்சிப் பாந்தள் வாயில் விழுதல்: இதனை "விருச்சிக பியாபலாயமான ஆசீவிஷமுகே நிபதித்ஹா நியாயம்" என்பர். இதனையே "கொசுகுக்கடிக்குப் பயந்து புலியின் வாய் அகப்பட்ட கதைபோல" எனவும் சிவஞான சுவாமிகள் வழங்குவர். சிவஞானசித்தியாரில் (சுபக்கம் 60, 61) "அயன்றன்னை ஆதியாக அரன் உருவென்ப தென்னை?" என வினவிய அநேகேசுர வாதியை மறுத்தற் பொருட்டுப் "பயந்திடும் சத்தியாதி பதிதலாற் படைப்பு மூலம் முயன்றனர்" என்றார். ஆயினும், "பயந்திடும் சத்தியாதி" எனச் சத்திக்குப் பன்மை கூறவே, சத்திமான் ஒருவனாதல் செல்லாமையின், இது தேளுக்கு அஞ்சிப் பாந்தள் வாயில் விழுந்தாலொப்ப மறித்தும் அநேகேசுர வாதமாகவே முடிந்தது போலும் என ஆசங்கை நிகழாமைப் பொருட்டுச் "சத்திதான் பலவோ? என்னில், தான் ஒன்றே! அநேகமாக வைத்திடும் காரியத்தால்" என அருள்நந்தி சிவாசாரியர் விளக்கியருள்வர். இதனை ஆங்கிலத்தில் From the frying pan to the fire எனவும், Avoiding Scylla, he falls into Charybdis எனவும் கூறுவர்.

இராஜபுரப் பிரவேச நியாயம் : அரசன் அரண்மனையி னின்று புறவுலாச் செல்லப் புறப்படுங்கால், ஐம்பெருங் குழுவும் எண்பேராயமும் முதலிய பலவகைப் பரிவாரங் களும் சூழப்போவான் ; மீண்டு அரண்மனையை அடையுங் கால், அவரவர் தத்தம் தகுதிக்கேற்ப ஒவ்வொரு வாயிலின் கண்ணும் விடை பெற்று முறை முறையே நின்றொழிய, அரசன் மட்டும் அந்தப்புரத்தினை அடைவன். அதுபோல, நனவு நிலையில் முப்பத்தைந்து கருவிகளுடன் புறத்தே இயங்கித் தொழிற்பட்டு, அக் கருவிகள் முறைமுறையே நின்று செயலற்றொழிய, உயிர்ப்படக்க நிலையிற் பஞ்ச கஞ்சுகனாகிய புருடன், மூலாதாரமாகிய அந்தப்புரத்தின் மூலப்பகுதியாகிய மனையாளைத் தழுவிக்கொண்டு அவிச்சை மாத்திரத்தை விடயித்து நிற்கும்.

"படைகொடு பவனி போதும் பார்மன்னன், புகும்போ தில்லிற்
கடைதோறும் விட்டு விட்டுக் காவலும் இட்டுப் பின்னர்
அடைதரும் தனியே அந்தப் புரத்தினில்; அதுபோல் ஆன்மா
உடலினின் அஞ்ச வத்தை யுறும்உயிர் காவல் ஆக"

—சிவஞான சித்தியார்

ஹாலிக ஜம்புக நியாயம் : ஹாலிக - உழுதுகொண் டிருப்பவன். ஜம்புகன் - நரி. ஒருவன் கொல்லையை உழுது கொண்டிருக்கையில் அங்கே ஒரு நரி வரக்கண்டு அந்நரியைப் பின்தொடர்ந்து சென்று தனது உழுதொழிலைக் கைவிடுவது போல்வது. எடுத்துக்கொண்ட பொருளைவிட்டு, இடையில் வரநேர்ந்த பொருளையே பெரிது விரித்துச் சென்று பிழை படுதலாகாது என்பது இதன் கருத்து. பின்வரும் திருநாவுக் கரசர் பாடல் இந்நியாயத்தினை ஒருவாற்றான் நினைப்பிக்கின்ற தெனலாம்.

"எரிபெ ருக்குவர் அவ்வெரி ஈசன(து)
உருஅ ருக்கம தாவதை ணர்கிலார்
அரிஅ யற்கரி யானைஅ யர்த்துப்போய்
நரிவி ருத்தம தாதவர் நாடரே"

"தெரிவுடையா ரோடு தெரிந்துணர்ந்து நின்றார்
பரியார் இடைப்புகார் பண்பறிவார் மன்ற
விரியா இமிழ்திரை வீங்குநீர்ச் சேர்ப்ப
அரிவாரைக் காட்டார் நரி" —பழமொழி நானூறு

மற்கட, மார்ச்சால கிசோர நியாயம்: மற்கடம் - குரங்கு. மார்ச்சாலம் - பூனை. கிசோரம் - குட்டி. குரங்குக் குட்டி தன்தாயின் வயிற்றை விடாது அணைத்துக் கொள்ளு தல் போல, அடியவர்கள் இறைவனின் திருவடிகளைச் சிக் கெனப் பிடித்துப் பற்றிக்கொள்ளுதல் வேண்டும். பூனை யானது தன் குட்டியைத் தானே சென்று பிடரியைக் கவ்வி எடுத்துச் சென்று காப்பாற்றுதல் போல, இறைவன் தனது பேரருளால் தானே வலிந்து வந்து அடியார்களை ஆட் கொண்டு காப்பாற்றுகின்றான். இவ்வுண்மைகளை உணர்த் துவனவே இவ்விரு நியாயங்களும் ஆகும். இறைவனின் திருவடிகளைச் சிக்கெனப் பிடித்துக்கொண்டு அயரா அன் பின் ஒழுகிய திறத்தால் மாணிக்கவாசகர் திருநாவுக்கரசர் என்னும் இருவரும் மற்கட கிசோர நியாயத்திற்கும், இறை வன் தானே தனது பேருருட் பெற்றியால் வலிந்துவந்து ஆட்கொள்ளப்பெற்ற சுந்தரர் சம்பந்தர் என்னும் இருவரும் மார்ச்சால கிசோர நியாயத்திற்கும் இனிய எடுத்துக்காட் டாவர் எனலாம்.

"மந்திக் குருளையொத் தேன்இல்லை நாயேன்! வழக்கறிந்தும்
சிந்திக்கும் சிந்தையை யான்என்செய் வேன்?எனைத் தீதகற்றிப்
புந்திப் பரிவிற் குருளைபை ஏந்திய பூசையைப் போல்
எந்தைக் குரியவன் காண்அத்த னேகயி லாயத்தனே"
—பட்டினத்தார்

நஹி நிந்தா நியாயம்: ஒருவரையும் ஒன்றனையும் குற் றங் கூறோம் என்னும் கோட்பாடு. நிந்தை - குற்றங்கூறல், பழித்தல். நஹி - இல்லை. "அண்மை நிலையாவது, சோறு கடல் முழங்கிற்றுண்டான் என இடையிற் பிற சொற்கள் வந்து பொருந்துதற்கு இடங்கொடாமல் தம்முள் அணுகிச்

சோற்றையுண்டான் என நிற்றல். இவ் அண்மை நிலை இலக்கணம் உணராதார் இடையிற் பொருந்தில் அதனைச் சான்றோர் ஒன்றனையும் குற்றம் கூறேம் என்னும் நியமத்தால் யாப்புவிதி நோக்கி வந்ததென்றும், மொழிமாற்று முதலிய பொருள்கோள் இலக்கணம் நோக்கி வந்ததென்றும், இடைப் பிறவரல் நோக்கி வந்ததென்றும், இன்னும் யாதானுமோர் பெயரையிட்டுச் சோற்றையுண்டான் கடல் முழங்கிற்று எனப் பிரித்து வேறு தொடராக்குவர்.''—இலக்கணக் கொத்துரை.

''மாணுக்கர்க்கு உணர்வு பெருகல்வேண்டி வெளிப்படக் கூருது உய்த்துணர வைத்தல் அவர்க்கு இயல்பாகலாற் செய்யுள் முடிபு என்பது கூருராயினர்.''—சேனுவரையம் (தொல். சொல். 1)

''நடுவுநிலைமை யுடையராய்ச் சிவாகமங்களை ஓதியுணர்ந்தார்க்கு அவருரைப்பன வெல்லாம் இந்திரசாலம் போல ஆரவார மாத்திரையேயன்றி நிலைபெற மாட்டாவாகலின், அவை ஒரு பொருளாகவைத்து மறுக்கற்பாலன அல்லவாகலானும், எத்தன்மையராயினும் சிவதீக்கை யுடையராய்ச் சிவாகமத்தில் விதித்தவாறெழுகி அகச் சமயத்தின் நிற்றலின் அவரைப் பழிக்கலாகாமையானும், அவரறிவு அவ்வளவிற்றென்று போதலே பொருத்த முடைத்தென்றொழிக.''

—சிவஞானபோதம் (சூ. 6, அ. 2)

பக விருத்தி நியாயம்: பகம் - கொக்கு, நாரை. விருத்தி - இருத்தல், இருக்கும் நிலை. கொக்கானது மடைத் தலையில் ஓடுமீன் ஓட உறுமீன் வரும் அளவும் ஆடாமல் அசையாமல் நின்று காத்திருக்கும். அதுபோலக் கருதியது முடியுங்காலம் வருந்துணையும் தக்கோர் காத்திருப்பர் என்பதனை விளக்க இஃது எடுத்துக் காட்டப்பெறும். முதுமொழி (பிரணவம்) நினைந்துசெய்யும் தியான நிலையை விளக்கவும் இதனை உவமையாகக் கூறுவர்.

''கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து'' —திருக்குறள்

" செக்கர்கொள் பொழுதினன் ஒலிநீவி இனநாரை
முக்கோல்கொள் அந்தணர் முதுமொழி நினைவார்போல்
எக்கர்மேல் இறைகொள்ளும் இலங்குநீர்த் தண்சேர்ப்ப "
—கலித்தொகை

" அரைசே பொன்னம் பலத்தாடும் அமுதே
என்றுன் அருள்நோக்கி
இரைதேர் கொக்கொத் திரவுபகல் ஏசற்
றிருந்தே வேசற்றேன்..." —திருவாசகம்

குணாட்சர நியாயம்: இதனை 'ஏரல் எழுத்து' என்பர் பரிமேலழகர். நத்தையானது ஊர்ந்து செல்லுங்கால் ஏற்படுங் கோடுகள் ஓரோவழி எழுத்துக்களைப்போலத் தோன்றுமாயினும், அவை எழுத்துக்களாதல் இல்லை. அதுபோல, "கல்லாதான் ஒட்பம் நன்றாகாது. ஆயிற்றாயினும் ஏரல் எழுத்துப் போல்வதோர் விழுக்காடு ஆகலின், அதனை நிலைபெற்ற நூலறிவுடையோர் மதியார்."—குறள் 404.

" தம்தொழில் ஆற்றும் தகைமையார் செய்வன
வெந்தொழில ராய வெகுளிகட்குக் கூடுமோ?
மைந்திறை கொண்ட மலைமார்ப! ஆகுமோ
நந்துழுத வெல்லாம் கணக்கு " —பழமொழி நானூறு

" நந்து நாதநீர் வண்டுசெல் நடைவழி எழுத்தாய்
வந்து வீழினும் வீழும்;அவ் வழக்கில் நின் கையிற்
சிந்து சாம்பரும் சிறுசொலும் மருந்தும்மந் திரம்போற்
சந்து சூழ்மலை யான்சுரம் தணித்தன கண்டாய்!"
—திருவிளையாடற் புராணம்

அர்த்த வைசச நியாயம்: அர்த்தம் - பாதி. வைசசம் - வெட்டுதல், கொல்லுதல். இதனை 'இடையன் எறிந்த மரம்' எனத் தமிழ் நூலார் வழங்குவர். ஆடுகள் தழை கறிக்கும் பொருட்டு, ஆயர்கள் மரத்தின் கிளைகளை அம்மரத்திலேயே தொங்குமாறு வெட்டி, முறித்துத் தாழவைப்பர். அவ்வாற்றான் அக்கிளைகள் வாடுதலுமின்றி வாழ்தலுமின்றி இடைநிலைப்பட்டுப் பெரிதும் மிக வருந்தும். அத்தகைய இரண்டுங் கெட்ட பெருந்துன்பத்திற்கு இதனை உவமையாக எடுத்துக் காட்டுவர். சிவபிரான் காமனை எரித்தபோது, கணவனை

இழந்த இரதிதேவி, தான் 'இடையன் எறிந்த மரம்'போலும் நிலையை எய்தியதாகக் கூறி இரங்கிப் புலம்பினள் என்பர்.

அடையப் பயின்றவர்சொல் ஆற்றுவராக் கேட்டால்
உடையதொன் றில்லாமை ஒட்டின்—படைவென்று
அடைய அமர்த்தகண் ஆயிழாய் அஃதால்
இடையன் எறிந்த மரம். —பழமொழி நானூறு

"கெடலருங் குரைய கொற்றங் கெடப்பிறர் ததுவும் அன்றி
நடலையுள் அடிகள் வைக, நட்புடை யவர்கள் நைய
இடைமகன் கொன்ற இன்ன மாந்நிரேன் தந்த துன்பக்
கடலகத் தழுந்த வேண்டா; களைகஇக் கவலை! என்றான்"
—சீவக சிந்தாமணி

"அடியார் நலத்தேம்ப ஒடியெறிந்து அவர்வயின்
மால்தீர்க்கும் அவன்மார்பென் றெழுந்தசொல் நோவேமோ?
முகைவாய்த்த முலைபாயக் குழைந்தநின் தார்எள்ள
வகைவரிச் செப்பினுள் வைகிய கோதையேம்"
—கலித்தொகை 68

"ஒடிய எறிந்தென்பது, 'ஒடியெறிந்து' என விகாரம் ஆயிற்று...
இடையன் கொன்ற மரம்ஆக்கி வைத்து..."
—நச்சினார்க்கினியர் உரை, (கலி. 68)

காகாக்ஷ கோள நியாயம்: அக்ஷம்-கண். கோளம்-உருண்டை, மணி. காக்கையின் கண்மணி ஒன்றாக இருந்தும் இரண்டு கண்களுக்கும் அஃதொன்றே மாறி மாறி ஏற்ற பெற்றி சென்று கூடிப் பயன்படும் என்பர்....

"மனம் நாட்டின்கண் நிகழ்வனவற்றைச் சென்றறிந்து வந்து வேந்தர்க்குப் புலனாகச்செய்யும் ஒற்றர்போலப், புறவிந்திரியங்களால் அறிந்த விடயத்தை இடைபேநின்று பற்றி வாங்கிப் புத்தியின் எதிர் விம்பமாய்த் தோன்றுமாறு கொண்டுய்க்கும் அக விந்திரியமாய்க், காகத்தின் கண்மணிபோல அகம் புறமாகிய ஈரிடத்தினும் விரைந்துசெல்லும் சதாகதியுடையதாய் நிற்பதாகலின், புற விந்திரியங்களோ டொப்பத் தானும் சாத்துவிக அகங்காரத்தினின்றும் அவற்றிற்கு முந்தித் தோன்றுமென்றல் பொருந்துமாறு அறிக."
—சிவஞானபோதப் பேருரை (சூ. 2, அ. 2)

" காகந் திருகண்ணிற் கோன்றே மணிகலந் தாங்கிருவர்
ஆகத்துள் ஒருயிர் கண்டனம் யாம்இன்று யாவையுமாம்
ஏகத் தொருவன் இரும்பொழில் அம்பலவன் மலையில் [கனே"
தோகைக்கும் தோன்றற்கும் ஒன்ருய் வரும்இன்ப துன்பங்
—திருக்கோவையார் 71

துஷ்யது துர்ச்சன நியாயம்: இதனை 'அவ்வளவின் அவன் மகிழ்க' என்னும் முறைமை என்பர் சிவஞான சுவாமிகள். "அறிந்தாங்கு அறிவதாகிய பிரமப்பொருள் அவிச்சைக் காலத்துக் கருவிகளோடும் கூடியன்றி அறியா தெனக் கோடுமாகலின், அதுபற்றி உயிர் வேறுண்டென்றல் பொருந்தாது என்னும் கடாவை ஆசங்கித்து 'அவ்வளவின் அவன் மகிழ்க' என்னும் நியாயத்தால் மேலும் அதன் தாற்பரியம் உணர்த்துதல் நுதலிற்று."
—சிவஞானபோதம் (சூ. 3, அதி. 6)

"சித்தமும் சித்தப் பகுதியுமாகிய அகச் சமுதாயம் ஐந்தும் மாயா காரியம் என்பது எம்மனோர்க்கு உடம்பாடன்மையின், அதுபற்றி ஆன்மா வேறுண்டெனச் சாதித்தல் அமையுமாறு என்னை ? என்னும் கடாவை ஆசங்கித்து 'அவ்வளவில் அவன் மகிழ்க' என்னும் நியாயம்பற்றி மேலும் ஓர் ஆற்ருற் சாதித்தல் நுதலிற்று."—சிவஞான போதம் (சூ. 3, அதி. 7)

"இதனுனே 'துஷ்யது' என்னும் நயமேயன்றி இன்னும் ஆயிரம் நயம் கூடினும், ஈண்டைக்குப் பயன்படாமை புணர்க..."—வைரக்துப்பாயம்.

யானும் அறியேன் அவனும் பொய்சொல்லாள்: இஃது ஒரு பழமொழி. இதனைச் சிவஞானசுவாமிகள் அவ்வப் போது எடுத்துக் கையாளுவர். ஓர் உண்மையை எத்துணை தான் முயன்று மறைத்து வைப்பினும், அஃது எவ்வாற்ருலேனும் வெளிப்பட்டே தீரும் என்பது இதன் கருத்து.

" 'முன்னுரை நலங்கொளார்க்கு நலமுறும் உரையுரைப்பாம்' என்றீர். எனவே, 'முன்னுரையே நலமுடைத்து ;

அதன் நலங் கொள்ளமாட்டாத பேதைகளுக்கு நாம் ஒரு நலமில் உரை யுரைப்பாம்' என்றதாயிற்று. இதனால், யானும் அறியேன் அவளும் பொய்சொல்லாள் என்னும் பழமொழிக்கு நும் வாக்குச் சிறந்த எடுத்துக் காட்டாம்.''—சிவசமவாதவுரை மறுப்பு.

'' 'சைவ சித்தாந்திகளை வழிபட்டுக் கேட்டால் மலைவறச் சொல்லுவார்கள்' எனப் படர்க்கை வாய்ப்பாட்டாற் கூறினீர். கூறவே, நீர் சைவ சித்தாந்திகள் அல்லீர் என்பதற்கு நீர் இங்ஙனம் கூறியே கூற்றே சான்றாயிற்று. 'யானும் அறியேன் அவளும் பொய்சொல்லாள்' என்ற பழமொழியின் பொருளை நும்பாற் கண்டேம்.''—சித்தாந்த மரபு கண்டன கண்டனம்.

'' காப்பான் மடமகள் காப்பான்கைப் பட்டிருந்தும்
மேய்ப்பாட்ட தென்றுண்ணாள் ஆயினள்—தீப்புகைபோல்
மஞ்சாடு வெற்ப! மறைப்பினும் ஆகாதே
தஞ்சாதி மிக்கு விடும்.'' —பழமொழி நானூறு

'' யாங்கு ஆகுவமோ? அணிநுதற் குறுமகள்
தேம்படு சாரற் சிறுதினைப் பெருங்குரல்
செவ்வாய்ப் பைங்கிளி கவர,நீ மற்று
எவ்வாய்ச் சென்றனை அவண்?எனக் கூறி
அன்னை ஆனாள் எழற, முன்னின்று
'அருவி யார்க்கும் பெருவரை நாடனை
அறியலும் அறியேன்; காண்டலும் இலனே;
வெதிர்புனை தட்டையேன் மலர்பூக் கொய்து
சுனைபாய்ந்து ஆடிற்றும் இலன்'என நினைவிலை
பொய்யல் அந்தோ! வாய்த்தனை. அதுகேட்டுத்
தலைஇறைஞ் சினளே அன்னை!
செலவுஒழிந் தனையால், அளியைநீ புனத்தே!''
—நற்றிணை 147

லூதா தந்து நியாயம்: லூதா - உலூதை, சிலந்தி. தந்து - நூல். சிலந்தியானது தனது வயிற்றினின்று நூலை

உண்டாக்கி வலை இயற்றி, மீண்டும் அதனைத் தன் வயிற்றுக்குள் அடக்கிக் கொள்ளும். அதுபோலப் பிரமமும் உலகத்தைத் தன்கணின்று தோற்றி மீட்டும் தன்கண் அடக்கிக் கொள்ளும் என்பர் மாயாவாதிகள். சிலந்தியானது தனது வாயின் நூலால் வலை பின்னி, அவ்வலையிற் றானே சிக்கிக் கொண்டு விடும். அதுபோல மனிதனும் தானே தீவினைகளைச் செய்து விட்டுப் பின்னர் அதன் விளைவுகளாற் சூழப்பெற்று 'அந்தோ வினையே என்று அழுங்கி' இடர்ப்படுவன் என்பதனை விளக்குதற்கும் இதனை எடுத்தாளுவதுண்டு.

"தாங்கும் உலகுக் குபாதானம் சத்தாம்; சிலம்பி நூல்தன்பால்
வாங்கி வைத்துக் காப்பதுபோல் வைய மெல்லாம் தன்பக்கல்
ஒங்க உதிப்பித் துளதாக்கி நிறுத்தி ஒடுக்கத் திலதாக்கும் ;
ஆங்கு வந்த வாறதனுல் சத்தாம் சகத்தின் அமைவெல்லாம்."

—சித்தியார், பரபக்கம் 225

"பிரமவாதிகள் பிரமம் பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் என்பது வேத முதலியவற்றிற்கெல்லாம் ஒப்ப முடிந்ததாகலின், அதுவே யமையும் என்பர். அவ்வம் முதற்காரணங்களின் குணமெல்லாம் அவ்வக் காரியங்கட்கும் உள என்பது நியமமாகலிற் சித்தாகிய பிரமத்தில் தோன்றிய பிரபஞ்சமும் சித்தாதல் வேண்டும் அன்றிச் சடமாதல் பொருந்தாது...... அற்றேல், சிலம்பியின் உண்டாகிய நூலுக்குச் சிலம்பியின் குணமும், கோமயத்தின் உண்டாகிய தேளுக்குக் கோமயத்தின் குணமும் காணுமையின், காரணத்தின் குணமே காரியத்திற்குக் கூடுமென்னும் நியமம் பொருந்தாதால் எனின்—சிலம்பி நூல் வருதற்குச் சூக்குமகாரணம் சிலம்பி வயிற்றினுண்மையானும், கோமயத்திற் றோன்றியது தேளின் உடம்பேயாகலானும், இன்னோரன்னவை யெல்லாம் பிறவிபேதமாகலானும் ஆண்டு ஐயப்பாடின்மை கண்டு கொள்க."- சிவஞான போதப் பேருரை.

"பொற்பிதிர் பிதிர்ந்தும் பொன்னே யாம்!நின்
தற்பரம் அசித்தைத் தருமாறு என்?எனச்
சிலம்பி நூல்தரும் நலம்போல் தோன்றும்
என்றனை! அதுவும் தன்தொழில் அன்றியும்

ஒன்றதன் இயல்பு; உலகுஓர் இயல்பன்று......
சத்துஅசத் தாகவும், சத்தினில் அசத்தின்
கொத்துள தாகவும் கூறினர் இலரால் !''
—மாயாவாதி நிராகரணம்

பங்கு அந்த நியாயம் : பங்கு - முடவன். அந்தன் - குருடன். குருடனுக்குக் கண்ணில்லாமையால் தானே நடவான். முடவனுக்குக் காலில்லாமையால் நடத்தல் இயலாது. எனவே, குருடனும் முடவனும் ஒன்றுகூடி என் செய்வதென்று ஆராய்ந்து, முடவனைக் குருடன் முதுகில் ஏற்றிக் கொள்வதென்றும், குருடனுக்கு முடவன் வழி புணர்த்திச் செல்வதென்றும் முடிபு செய்து, ஒருவருக் கொருவர் உதவி புரிந்து கொண்டனர். அதுபோல, அறியாமையுடைய 'சுத்த புருடன்' என்னும் குருடன் 'பிரகிருதி' என்னும் முடவனைத் தன்முதுகில் ஏற்றிக்கொண்டு, அவனல் வினைவழியே நிகழும் அறிவொளியை ஒருசிறிது பெற்று, உலகப் பொருள்களில் ஈடுபட்டு உழல்வான் என்பதனை விளக்க இதனை எடுத்துக் காட்டுவர்.

"புருடன் பிரகிருதிபெற்றால்
போதம் சிறிதங் குண்டாகிக்
குருடன் முதுகில் முடவன்இருந்
தூர்ந்தாற் போலப் பிரகிருதி
இருள்தன் இடத்தே இருந்தியங்கும்!
கன்மால் இறையன்று! இரண்டினையும்
மருள்தன் உருவாய்ச் சேட்டிப்பித்து
அறியும் அமலன் அரனேயாம் !''
—நிரீச்சுர சாங்கியன் மதமறுதலை

இன்னோரன்ன நியாயங்கள் மிகப்பல உள்ளன. அவற்றுள் ஒருசிலவே ஈண்டுக் "கபோத நியாயம்" பற்றி ஓரளவு தொகுத்துரைக்கப் பெற்றன. இடச் சுருக்கங் கருதி ஈண்டு விளக்கப் பெறாது விடப்பெற்ற ஏனைய பலவற்றையும், ஏற்ற பெற்றி ஆராய்ந்துணர்ந்து கொள்ளுதல் சைவ சித்தாந்தம் பயிலும் மாணவர்க்குப் பெரிதும் நலம் பயக்கும்.

—

# கடவுளால் முடியாத காரியங்கள்

[முரு. பழ. இரத்தினம் செட்டியார்]

(மலர் 33 ; இதழ் 8 ; 254-ம் பக்கத் தொடர்ச்சி)

12. அநாதிப் பொருள் அழியாதென்பது சரியே ; ஆனால் இறைவனின் "எல்லாம் வல்லமை" அடிபட்டுத் தானே போகிறது ?

உயிர்களிடத்தில் அறியாமை காணப்படுவதாலும், அவ்வறியாமை படிப்படியே நீங்குவதாலும், அவற்றின் அறிவை மறைக்கின்ற ஒரு பொருள் அநாதியே இருக்க வேண்டும் என மேலே எடுத்துக் காட்டினோம். ஒரு பொருளின் தனித்த இருப்புக்கும் இயல்புக்கும் ஏன் என்னும் கேள்வி எழாது. எந்தப் பொருளும் தன்னளவில் இருப்பது இயற்கை ; அது பிறபொருளுடன் தொடர்புபடும் பொழுதோ அல்லது அதன் நிலையில் மாறுதல் காணப்படும் பொழுதோ "ஏன்?" என்னும் கேள்வி எழும். ஆகவே மலம் யாராலும் உண்டாக்கப்படாமல் தன்னளவில் அநாதியே இருப்பதை "ஏன்" என்று கேட்கமுடியாது. "இருக்கிறதா?" என்றுமட்டும் தான் ஆராயலாம். ஆனால், "அஃது உயிர்களின் அறிவை மறைக்கிறது" என்னும்பொழுது, "ஏன் ?" என்னும் கேள்வி பிறக்கிறது. வியாபகமாயும், இருள் போன்ற தன்மையினை இயற்கையில் உடையதாயும் மலம் இருத்தலால், எளிய இயல்பினை உடைய உயிர்கள் அதனைப் பற்றி மறைப்புக்குள்ளாகின்றன என விடை காண்கின்றோம். சடப்பொருளாகிய உடலின் துணையால் சித்துப்பொருளாகிய உயிர் அறிவு விளக்கம் பெறுவதையும், அவ்வுடலில் ஏதேனும் ஊறு நிகழ்ந்தால் அறிவு தடுமாறுவதையும் நாம் பிரத்தியட்சமாகப்பார்ப்பதால், சடப்பொருள் சித்துப்பொருளுக்குத் துணையாகவும் இருக்கக்கூடும் ; தடையாகவும் இருக்கக்கூடும் என்பது புலனாகிறது. எனவே சடப்பொருளாகிய மலம் சித்துப் பொருளாகிய உயிரின் அறிவை மறைக்கும் எனக் கொள்வதில் தவறில்லை. இத்தகைய மலம் அநாதியிலேயே இருந்தது என்றும் உயிர்கள்

அதனைப் பற்றி அநாதியிலேயே மறைப்புக்குள்ளாயின என்றும் முடிவு கண்டதற்குப் பிறகே இறைவன் தன் வல்லமையால் அதனை ஏன் இல்லாமற் செய்யக்கூடாது? என்னும் கேள்வி கேட்க இடமுண்டு. ஒரு பொருள் யாரா லும் உண்டாக்கப்படாமல் அநாதியில் இருந்தால், அதனை ஒழித்தல் என்னும் நிகழ்ச்சி அதற்குப் பின்னர் தானே நிகழமுடியும். அநாதிப் பொருள் அழியாது என்னும் இலக்கணத்திற்கு முரணாக இருந்தாலும், இறைவனின் “எல்லாம் வல்லமை” பற்றி ஆராய்வதற்காக அவன், மலம் என்னும் பொருளே இல்லாமல் அழித்துவிடுகிறான் என்று வைத்துக்கொள்வோம். நிலைமை என்னாகும்? பொருளைப் போலவே பொருளின் வாசனையும் அறிவினைப் பந்தப்படுத் தும் தன்மையுடையது. ஆன்மாக்கள் அறிவுடைப் பொருட் களாதலால், அவற்றின் அறிவினிடத்தே, பதிந்த மலப்பற்றே மலமிருந்தால் செய்யக்கூடிய அத்தனை கேட்டையும் செய்ய வல்லதாகும். வேம்பு நின்ற புழுவினை உய்விக்கக் கருதி, அவ்வேம்பினை ஒழித்துக் கரும்புக்தோட்டத்தினுள் விடுப்பி னும், கரும்பினைப் பற்றிப் பயன் கொள்ள அறியாது, வேம்பின் நினைவால் ஏங்கி வாளாகிடத்தல்போல, மலத்தினை இல்லாமற் செய்துவிட்டாலும், உயிர்கள் அம்மலத்தின்மீது வைத்த பற்றால் அதனையே நோக்கி வாளாகிடக்குமே அன்றி வேறொன்றினைப் பற்றிப் பயன் கொள்ளமாட்டா. ஆணவமல இருப்பால் மட்டும் உயிர்கள் பந்தமுறவில்லை. முக்தியிலும் ஆணவமலம் இருக்கத்தான் செய்கிறது; ஆண்டு அவை பந்தமுறாமைக்குக் காரணம் என்ன? மலத்தின்மீது அவை வைத்திருந்த பற்றைவிட்டு இறைவன்மீது பற்றுக்கொண் டமையே காரணமாகும். ஆகவே மலத்தை இல்லாமற் செய்வதால் அநாதியிலேயே அதனைப் பற்றிய உயிர்களுக்குப் பயன் விளையாது. அம்மலத்தின் மீதுள்ள விருப்பினை நீக்கியாகவேண்டும். அவ்விருப்பினை நீக்குவதற்காகவே இறைவன் மாயா கருவிகளைப் படைத்தளித்து, உயிர்களின் அறிவு, இச்சை, செயல்களைத் தொழிற்படச் செய்து, அனுபவ உணர்வை எழுப்புகின்றான். உயிர்கள் அநுபவத்

தின் மூலமே ஒன்றிலுள்ள பற்றை நீக்கி மற்றொன்றைப் பற்றும் இயல்பு வாய்ந்தவை. உயிர்களின் இயல்புகள் மாற்றப்படமுடியாதவை என்பதை முன்னர் விளக்கியிருக்கிறோம். எனவே அவற்றின் இயல்புகளுக் கேற்றவாறு செய்யவேண்டிய உதவிகள் அனைத்தையும் இறைவன் குறைவறச் செய்கின்றான். செய்யவேண்டியதைச் செய்து முடிப்பது தான் வல்லமையே அன்றிச் செய்யவேண்டாததைச் செய்வது வல்லமை அன்று. இதனால் இறைவனின், "எல்லாம் வல்லமை"க்கு எவ்வித இழுக்கும் நேரவில்லை என்பதை நன்கு அறியலாம்.

13. ஆணவமல இருப்பு இறைவனுக்கு ஒரு 'சவாலா' காதா? ஆணவமலம் இறைவனை ஒரு சிறிதும் பாதிப்பதில்லை; அவன் வியாபகத்தை அது தடை செய்யவில்லை. உயிர்கள் தம் எளிய இயல்பால் ஆணவமல மறைப்புக்குள்ளாகின்றனவே அன்றி இறைவனின் வல்லமைக்குறைவால் அன்று. இறுதியில் அவை இறைவனைச் சார்ந்தபோது மலம் பாதிப்பதில்லை. ஆகவே ஆணவமல இருப்பு இறைவனுக்கு எவ்வாற்றானும் ஒரு 'சவாலா'காது. "வில்லியம் ஜேம்ஸ்" (Prof. William James) கூறும் பின்வரும் மொழிகள் ஈண்டு நினைவு கூரத்தக்கவையாகும்—

> "God is not necessarily responsible for the existence of evil; He is responsible only if it is not finally overcome."

மேலும் இறைவனின் அருள்வெளிப்பாரப்பினுள் எல்லாப் பொருட்கும் இடனுண்டு எனக் கூறுவது அவனுக்குப் பெருமையே அன்றி இழுக்காகாது.

14. ஆணவமல பந்தம் அநாதி என்றால், முத்தியில் அது நீங்கும் எனக் கூறுவது அநாதித் தன்மைக்கு விரோதமாகாதா?

சைவ சித்தாந்தத்தில், "நீக்கம்", "ஒடுக்கம்" எனச் சொல்வதற்கு நாம் கொள்ளவேண்டிய பொருள் முற்றிலும்

வேறாகும். "வசித்திடவரு வியாபியான" ஆன்மா முத்தியில் இறைவனைச் சார்ந்து முழுவியாபகம் எய்துகிறது. முழு வியாபகமான ஒரு பொருட்கு நீக்கம் சொல்லவராது. அப்படியிருந்தும் முத்தியில் ஆன்மா ஆணவமலத்தை விட்டு நீங்குகிறது என்று சொல்கிறோம். அதன் பொருள் என்ன? நீக்கம் என்பது பொருள் நீக்கம் அன்று. சிவஞானபோதம் 8-ம் சூத்திரம் 4-ம் அதிகரண உரையில், "வியாபகப் பொருட்குக் காட்சி விசேடமே நீக்கமாகலின்..." என்றும் 9-ம் சூத்திரம் இரண்டாம் அதிகரண உரையில், "வியாபகப் பொருட்கு ஒருவுதலாவது உணர்ச்சி விசேடமேயாம்..." என்றும் சிவஞான முனிவர் வியாபகப் பொருட்குரிய "நீக்கத்தை" நன்கு விளக்கம் செய்துள்ளார். முத்தியில் உயிர் ஆணவமலத்தின்கண் உள்ள விருப்பினை நீக்கி இறைவனை உணர்ந்து நிற்கும் உணர்ச்சி விசேடத்தையே "நீக்கம்" என்று சொல்கிறோம். அநாதிப் பொருள் அழியாது; தன் இயல்புகளினின்றும் மாறுபடாது. ஆணவமலம் முத்தியில் அழியவும் இல்லை; மறைத்தலைச் செய்யும் தன் இயல்பினின்றும் மாறவும் இல்லை. ஆனால் முத்தியில் உயிர்கள் இறைவனை உணர்ந்து நிற்கும் உணர்ச்சி விசேடத்தால் மலத்தால் பாதிக்கப்படாமல் இருக்கின்றன. இந்த நிலையையே, "நீக்கம்" எனக் குறிக்கின்றோம்.

ஆணவமலம் முத்தியில் வலி கெட்டு ஒடுங்குகிறது என்றும் நாம் சொல்வதுண்டு. மலத்திற்குரிய மறைக்கும் தன்மை என்ஞான்றும் கெடுவதில்லை. சிலர், "ஒரு விதையை வறுத்துவிட்டால் முளைக்கும் அதன் ஆற்றல் கெட்டுப் போகிறது; ஆனால் விதையாகிய பொருள் இருக்கிறது; அதுபோல ஆணவமலம் முத்தியில் ஆற்றல் கெட்டுப் பொருள் மாத்திரமாக நிற்கிறது" எனச் சொல்வதுண்டு. குணம் கெட்டுக் குணி நிற்கும் என்னும் கொள்கையைச் சைவ சித்தாந்தம் ஏற்பதில்லை. வறுத்த விதையில் "முளை" அழிந்து போவதால் முளைக்கும் ஆற்றலும் இல்லாமற் போகிறது. "முளை" என்னும் பொருள் உண்டென்பதை நோக்காமல் முளைசிற்கும் விதையைப் பொருளாக மயங்கக்

கொண்டு கூறும் இந்த உதாரணம் பொருந்தாது. ஆகவே ஆணவமல வலி கெடுவதென்பது அப்பொருளே இல்லாமற் போவதென்றே பொருள்படும். அநாதிப் பொருள் அழியா தாதலால் அதன் வலியும் கெடுமாறில்லை. முத்தியிலும் ஆணவமலம் தன்னளவில் எப்பொழுதும் போல் ஆற்றல் குன்றாமல் மறைத்தற்றொழிலைச் செய்து கொண்டு தானிருக் கிறது. ஆனால் முத்தான்மாக்களிடத்தில் அதன் ஆற்றல் பலிக்காமையால் அவ்வான்மாக்களை நோக்க அஃது வலி கெட்டு ஒடுங்குகிறது என்று கூறுகிறோம். "ஒடுக்கம்" என்பது உண்மையில் ஒடுக்கமன்று; முத்தான்மாக்களை நோக்க "ஒடுக்கம்" என அறிதல் வேண்டும். "நீங்குதல்" என்பதற்கும் "வலி கெட்டு ஒடுங்குதல்" என்பதற்கும் இங்ஙனம் பொருள் விளக்கம் செய்து கொண்டோமானல் முத்தி நிலைபற்றிய குழப்பங்கள் யாவும் ஒழிந்துபோகும்.

உயிர்களுக்கு அறிவு, இச்சை, செயல்கள் அநாதியே உண்டாதலால் ஒன்றைப்பற்றலும் ஒன்றை விடுதலும் அவைகளுக்கு அநாதியே அமைந்த இயல்பேயாகும். எனவே ஆணவமலப் பற்றை விடுத்து இறைவனைப் பற்றி நிற்றல் அவற்றின் அநாதித் தன்மைக்கு மாறானதன்று. "பற்றும் தொழில்" உயிர்க்கு அநாதியாயுண்டென்பதைச் சிவஞான முனிவர், "அநாதியே மலத்தைப் பற்றுதல் உயிரின் வினையாய்......" எனச் சிவஞானபோதம் நான்காம் சூத்திரம் இரண்டாம் அதிகரண உரையில் குறிப்பிடுகின்றார். அநாதி யாய் அமைந்த "பற்றும் தொழிலுக்"கு மாறின்றியே உயிர் முத்தியிலும் ஒன்றைப் பற்றி நிற்கிறது. ஆனால், "பற்றப் படும் பொருளில் வேறுபாடு இருக்கிறதே? அஃது அநாதியில் நின்ற நிலைக்கு மாறாகாதா?" எனக் கேட்கலாம். பொருட் கள் அநாதியில் நின்ற நிலையிலேயே நிற்பதில்லை. அநாதியில் காரண நிலையில் நின்ற மாயை காரிய நிலைக்கு வருகிறது; அநாதி கேவலத்தில் மாயாகருவிகளைப் பற்றாமல் நின்ற உயிர் பின்னர் அவற்றைப் பற்றிச் சகல நிலைக்கு வருகிறது. எனவே நிலைமாற்றம் அநாதித்தன்மைக்கு விரோதமாகாது. ஆனால் அம்மாற்றம் ஏற்படுவதற்குத் தக்க ஏது வேண்டும்.

காரண நிலையில் நின்ற மாயையை உயிர்களின் பொருட்டு இறைவன் காரிய நிலைக்குக் கொண்டு வருகிறான். அது போலவே உணர்விழந்து கிடந்த உயிர்களுக்கு இறைவன் மாயா கருவிகளைப் படைத்தளித்து உணர்வூட்டுவதால் அவை முத்தியில் அவனைப் பற்றி நிற்கின்றன. ஆனால், "காரிய நிலையில் நின்ற மாயை மீண்டும் அநாதியில் நின்றது போல் காரண நிலையை எய்துகிறது. அங்ஙனமே சுத்த நிலையாகிய முத்தியில் இறைவனைப் பற்றி நின்ற உயிர் அநாதியில் நின்றதுபோல மீளவும் மலத்தைப் பற்றுமோ ?" என ஐயுறலாம். காரிய நிலையில் நின்ற மாயை, தானே காரண நிலைக்குச் செல்லாது ; இறைவனே அதனை அந்நிலைக் குக் கொண்டு செல்கிறான். முத்தியில் நிற்கும் உயிர்களை இறைவன் அங்ஙனம் கேவலநிலைக்குச் செல்லுமாறு செய்ய மாட்டானாதலால் அந்த ஆசங்கைக்கு இடமில்லை. "மாயை சடப்பொருளாதலால் அது காரணநிலைக்குச் செல்வதற்கு இறைவன் துணைவேண்டியதிருக்கிறது; சித்துப் பொருளாகிய உயிர், தானே அநாதியில் நின்ற நிலைக்குச் செல்லலாமல்லவா? இறைவன் ஆன்மாக்களின் அறிவு, இச்சை, செயல்களின் போக்கின்படியே தானே துணைநிற்கிறான் ?" என்று வினவலாம். அறிவுடைப் பொருளாகிய உயிர் அங்ஙனம் செல்வதற்கும் ஒரு காரணம் வேண்டுமன்றோ ? முத்தி நிலையினும் பார்க்க அநாதியில் நின்ற கேவலநிலை இனிமை பயப்பதாக இருந்தால் உயிர் மீண்டும் அங்ஙனம் செல்லும் எனக் கூறலாம். "தானென அவனென" வேறின்றி நின்று மாறாத பேரின்பத்தை நுகரும் அது மீண்டும், "உணர்வின்றிக் கிடக்கும் நிலையை" விரும்பாதாதலால், அங்ஙனம் அது செல்லும் எனக்கூறுவதற்கு எவ்வாற்றானும் இடமில்லை என்க.

இதுவரை கூறியவாற்றால் ஆணவமலம் பற்றிய சந்தேகங்கள் அனைத்தும் நீங்கியிருக்கலாம். இனி இக்கட்டுரையின் தொடக்கத்தில் எடுத்துக்கொண்ட "முடியாமைகளை" நிறுவுவது மிக எளிதாகும் :—

முடியாமை : (1) எல்லா ஆன்மாக்களுக்கும் இறைவன் உடனடியாக முத்தி அளிக்க முடியாது. ஏன் ?

மேலே கேள்வி(9)க்குள்ள விடையில் ஆணவமல பந்தத்தினின்றும் உயிர்களை உடனே விடுவிக்க முடியாதென்பதற்குரிய காரணங்களைக் கூறியிருக்கிறோம். எனவே ஆன்மாக்களுக்கு இறைவன் உடனடியாக முத்தி அளிக்க முடியாதென்பது நன்கு விளங்கும். மேலும் ஒவ்வோர் ஆன்மாவுக்கும் அதற்கே உரித்தான தனி இயல்புகள் உண்டு. இவ்வியல்புகள் வேறுபாட்டாலேயே அவை பலவாக இருக்கின்றன. இறைவன் ஒவ்வோருயிர்க்கும் அதனதன் இயல்பிற்கேற்ற வாறே அநுபவ உணர்வை ஊட்ட வேண்டியிருக்கிறது. ஆகவே எல்லா ஆன்மாக்களுக்கும் உடனடியாக முத்தி அளிக்க முடியாதென்பதைக் கூறவேண்டுவதில்லை. இம் முடியாமையால் இறைவனின் வல்லமைக்கு எவ்வித இழுக்குமில்லை என்பதை முன்னர் எடுத்துக் காட்டியிருக்கிறோம்.

முடியாமை: (2) உலகில் தீயசெயல்களே நடைபெறாமல் அறவே ஒழித்து நல்ல செயல்கள் மட்டும் நடைபெறும் படி இறைவனால் செய்யமுடியாது. ஏன் ?

மேலே கேள்வி(10)க்குள்ள விடையில் இறைவன் நல்வினை, தீவினை இரண்டிற்குமே துணைநின்றாகவேண்டியிருக்கிறது என்பதை விளக்கியிருக்கிறோம். ஆணவமல பந்தம் இருக்கும் வரை உயிர்கள் நல்வினை, தீவினை இரண்டையும் செய்தே தீரும். நல்வினையின் பயனாக வரும் இன்பம் போலவே தீவினையின் பயனாக வரும் துன்பமும் ஆணவமல பந்த நிவர்த்திக்குத் துணைசெய்கிறது. ஆணவமல மறைப்புக்குள்ளான உயிர்களைத் தீவினைகள் செய்ய வொட்டாமல் தடுத்து நிறுத்தினால் அவற்றின் அறிவு, இச்சை, செயல்கள் தொழிற்பட முடியாமற் போய்விடும். சிலர், உலகில் தீமை பெருகி நிற்பதை இறைவன் ஏன் ஒழிக்கக்கூடாது ?" என்று கேட்கிறார்கள். ஏழை உயிர்களின் அறிவு, இச்சை, செயல்களுக்கு இறைவன் அளிக்கும் பாதுகாப்பின் அருமையை உணர்ந்தால் அங்ஙனம் கேட்கமாட்டார்கள். ஆகவே நல்ல

செயல்கள் மட்டுமே நடைபெறும்படி. இறைவன் செய்வதற்கில்லை. இம்முடியாமையால் இறைவனின் எல்லையற்ற கருணைநிலை இனிது புலனாகின்றது.

"இறை, உயிர், தளை" ஆகிய முப்பொருட்கள் பற்றிய அரிய நுட்பங்களை எல்லாம் சைவ சித்தாந்தம் ஒன்றே உலகிற்கு நன்கு எடுத்துக் காட்டும் நிலையில் இருக்கிறதென்பதைக் கூறிக் கட்டுரையை முடிக்கின்றோம்.

---

# சிவம்

(திரு. இருக்கம் - ஆதிமூல முதலியார்)

"சி" என்பது கிடத்தல் எனப் பொருள்படும். அஃதாவது, எல்லாப் பொருள்களும் இறுதிக்காலத்துத் தன்னிடத்து ஒடுங்க, அதைப் போலத் தான் ஒடுங்குதலின்றி அவற்றிற்கெல்லாம் ஒடுங்குமிடமாய் நிலைபெற்று, என்றும் ஒரே தன்மையுடையதாய் நிற்பது என்பது அதன் பொருளாம். இறுதிக்காலத்து உலகமனைத்துந் தத்துவங்களினும், தத்துவங்கள் மாயையினும், மாயை சிவசத்தியினும், சிவசத்தி சிவத்தினும் ஒடுங்க, சிவம் அவையனைத்தையும் ஒடுக்கிச் சுயம்பிரகாசமாய் நிற்குமென்பது வேதாகம நூற்றுணிபாம்.

"வ" என்பது அப்பொருளின் குணமாகிய சத்தியையுணர்த்தும். அது சூரியனில் ஒளி போல்வது. ஒளியும் சூரியனும் வேறல்லவாயினும் குணத்தன்மை குணித்தன்மையென்னும் தன்மை வேறுபாட்டால் இருமையாக எண்ணப்படும். அவ்வாறே, சத்தி சிவம் என்பன குணகுணிபாவத்தால் இரு தன்மையுடையனவென மதித்து, அப்பொருள் பயக்கும் பெயராய் ஈரியல்பினையும் அடக்கிச் "சிவம்" எனப்படும்.

அச்சிவத்தின் இயல்பு ஞானமும் ஆனந்தமுமாம். ஞானம் என்பது சத்தும் சித்துமாய இரு தன்மையை யடக்கி நிற்கும். சத்தாவது காரிய காரணப்படுதலின்றித் தானே சுயம்பிரகாசமாய் நிற்பது. இந்த இரண்டு தன்மையும் முதல்வனிடத்துள்ள விசேட இயல்பாம். அதுவே ஞானம்

எனப்படும். ஆனந்தமாவது சருவஞ்ஞத்துவம், திருத்தி, அநாதிபோதம், சுவதந்திரம், அலுத்தசத்தி, அனந்தசத்தி, நிராமயான்மா, விசுத்ததேகம் என்னும் எண்குணமுடைமையாம்.

இச்சிவத்தின் குணங்கள் பலவற்றுள் உயிர்களின் மேல் வைத்த கருணைக்குணம் பராசத்தி யெனப்படும். அக்கருணையின் வசப்பட்டு நின்ற சிவம் அந்நிலையிற் பதியெனப்படும். அப்பதியினது சந்நிதானத்தில் உலகம் ஐந்தொழிற்படும். அவ்வைந்தொழில் நடத்தற்கு ஏதுவாய் நின்ற பதியினது சத்தி ஆதி அல்லது திரோதாயி எனப்படும். பதியும் அவ்வாதி சத்தியும், சூரியனும் அதன் கிரணமும் போல நிற்பனவாம். சூரிய சந்நிதானத்தில் அதன் கிரண விசேஷத்தால் தாமரை அரும்புதலும் மலர்தலும், புலர்தலுமாகிய காரியப்பாட்டினை எப்படி யடையுமோ, அப்படியே, பதியினுடைய சந்நிதானத்தில் உலகம் தோன்றி நின்று அழிதலாகிய காரியப்பாட்டினை யடையும். இந்த உவமானத்தில் தாமரையானது காரியப்பாட்டால் சூரியனுக்கு யாதொரு விகாரமுமின்மை எவரும் அறியத்தக்கது. அதுபோலவே உலகினது காரியப்பாட்டில் முதல்வனுக்கு விகாரமின்மை தெளியப்படும். இன்னும் அவ்வுவமானத்திற் சூரிய கிரணமும் விகாரப்படுதலில்லை. அதுபோல ஆதி சத்தியும் விகாரமடைதலில்லை. அச்சத்தி உயிர்கட்கு மலத்தை நீக்கிச் சிவத்தையளிக்க விரும்பிய பொழுது இச்சாசத்தி யெனப்படும். அதன் பொருட்டுச் செய்யவேண்டிய உபாயங்களை யறியும்போது ஞானசத்தி யெனப்படும். அவற்றைச் செய்யும்போது கிரியாசத்தி யெனப்படும். இவ்வாறு வியாபார பேதம்பற்றி ஐவகையாகக் கொள்ளினும் முதல்வனது சத்தி ஒன்றேயாம்.

இன்னும், ஆதிசத்தி ஐந்தொழில் செய்யும் அவதாரத்தில் ஆரணி சௌநி ரோதயித்திரி என முத்திறமாக எண்ணப்படும். அச்சத்திகள் மூன்றும் பிரமா, விஷ்ணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்னும் ஐந்து கர்த்தாக்களை அதிட்டித்து நின்று, முறையே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து தொழில்களைச் செய்யும்.

அச்சிவசத்தி இவர்களிடத்தே தங்கி இவர்களை அதிட்டித்து ஐந்தொழில் செய்தலால், இவர்களும் சிவவடிவங்களாக உபசரித்துக் கூறப்படுவர். உண்மையில் இவர்கள் அதிட்டான வடிவங்களாம். அதிட்டானமாவது நிலைக்களமாகக்கொண்டு செலுத்துதல். பதியின் ஆதிசத்தி ஆரணி முதலிய மூன்ருக நின்று ஐந்து கர்த்தாக்களை அதிட்டிக்குமென்பது துணரத் தக்கது. அஃது எதுபோலுமெனில், அரசனுடைய ஆணையாகிய சத்தி மந்திரி முதலாகிய பலரிடத்து நின்று அவ்வப் பெயர் பெற்று அவ்வவர்க்குரிய தொழிலை நடத்துதல் போலுமென்க.

இன்னும், முதல்வனர் ஊரும் பெயரும் உருவுங் கடந்தவராயினும் உயிர்களிடத்தே வைத்த கருணையால் ஊரும் பெயரும் உருவுங் கொண்டருளுவர். அப்படிக் கொள்ளுமிடத்துத் தனது அருட்சத்தியினிடமாகக் கொள்வதும், மாயையினிடமாகக் கொள்வதும் என்னும் வேறுபாடு பற்றி அவை இருவகைப்படும். அருட்சத்தியினிடமாகக் கொள்ளும் வடிவங்கள் சம்புபட்ச மெனப்படும். மாயையினிடமாகக் கொள்ளும் வடிவங்கள் அணுபட்ச மெனப்படும். ஆடியில் நிழல் போல்வது அருட்சத்தியினிடமாகத் தோன்றுவது. அது பூசை தியானதிகளின் பொருட்டுக் கொள்ளப்படுங் கற்பித வடிவமாம்.

சூரிய சந்நிதானத்தில் இருள் முனைத்து நில்லாதவாறு போல, சிவமென்னும் பொருளின் எதிரே மலமாயை கன்மங்கள் முனைத்து நில்லா. அதனுல் அவை சிவத்தினுல் இயக்கமுறுமென்று கொள்ளுதல் அமையாது. அது பற்றியே சத்தியின் ஏகதேச இயக்கத்தில் அவை தொழிற்படு மென்று வேத சிவாகமங்கள் கூறும்.

இனி, மாயாகாரிய வடிவம் முதல்வனெதிரே அசத்தாயொழிதலின், அவ்வடிவினை முதல்வன் ஏற்றுக்கொள்ளான். அதனுல் அவை சத்தியின் அதிட்டானமாகிய அணுபட்சங்களென உண்மை யுணர்தற்பாற்று.

இவ்வகையில் அயனும் அரியும் பிரகிருதியுட்பட்டவராகலின், அவ்வியல்புடைய சகலவர்க்கத்துள் அதிகாரம்

பெற்றவரென எண்ணப்படுவர். உருத்திரமூர்த்தி பிரகிருதியை நீங்கினவராகலின், அவ்வியல்புடைய பிரளயாகலருள் முத்தராய் அதிகாரம் பெற்றுச் சிவவடிவெய்தி நிற்பவராக எண்ணப்படுவர். மகேசுர சதாசிவர்கள் ஈசுரசாதாக்கிய தத்துவ நிலையராகலின், இறைவனது சுதந்தரவடிவமாகிய அதிகார போக ரூபங்களாம். இவையனைத்தினும் பதியினது சத்தியே நிலவுவதாம். அக்கினியானது ஒன்றிற்றங்கி நின்றல்லது தொழில் செய்யாது. அது போலவே சிவசத்தியும் ஒவ்வோர் வடிவினை யதிட்டித்து நின்றே தொழில் செய்யும். தாமரையின் காரியப்பாடு சூரிய கிரண சம்பந்தத்தால் நிகழ்தல் போல, ஐந்தொழிற்படு முறைமை சிவசத்தி சம்பந்தத்தால் நிகழ்வதாம்.

அதனால், முதல்வனுக்கு உளதாகிய இவ்வியல்பு பொதுவியல்பு எனப்படும்.

தாமரைக்கும் சூரியனுக்கும் உளதாகிய சம்பந்தம் எத்துணையோ, அத்துணையே, உலகுக்கும் பதிக்கும் உளதாகிய சம்பந்தமும், அது பற்றி வரும் பொதுவியல்புமாம்.

சூரியனாலே தாமரை காரியப்படுமென்பது மறுக்க இயலுவதன்று. அது போலவே உலகம் பதிப்பொருளாற் காரியப்பாடுறும் என்பதும் மறுக்கத் தக்கதன்று.

இனி, முதல்வன் உயிர்கள் பொருட்டாகக் கொள்ளும் உருவங்களில் உமாமகேசுரர், தக்ஷிணாமூர்த்தி, சபாபதி முதலியவாக இருபத்தைந்து வடிவங்களும், அவற்றுள்ளும் பல பேதங்களும் உள்ளனவென்பது உண்மையாம். அவை ஒவ்வோர் காலத்து ஒவ்வொருவர் பொருட்டு ஒவ்வொரு காரணம் பற்றிக் கொள்ளப்பட்டன. இவ்விருபத்தைந்து கேவல மூர்த்தங்களும் மகேசுரராற் கொள்ளப்படுவன. உருத்திரர்க்கும் அவை உரியனவேயாம். பிரம விஷ்ணுக்கள் அவ்வடிவினை எடுத்தற்கு உரியவரல்லர். அவரது சகல நிலையே அங்ஙனமொழிதற்குக் காரணமாம்.

இதுகாறுங் கூறியவற்றால், சிவம், சத்தி, பதி, சத்தி பேதங்கள், அதிட்டான வடிவங்கள் என்பன நனித்து உணர நின்றன. முதலாவது சிறப்பியல்பும் பொதுவியல்பும்

வெள்ளிடைமலைபோல் விளங்கக் கிடந்தன. இவற்றின் உண்மை யுணர்ந்தாரே சிவத்தின் இயல்புணர்ந்தவராவர். ஏனையோர் அன்னராகாரென்றுணர்க.

---

# படைப்பு

1. சித்தாந்தம் 1960 ஆகஸ்டு இதழில் படைப்பின் கருத்தை ஒரு பெரியார் நன்றாய் விளக்கி இருக்கிறார்கள். இந்த மேம்பாடு உடைய கருத்தை அறியாத அநேகர்கள் அறியும்படி செய்ய, மேல் நாட்டார்கள் அச்சு யந்திரங்களையும் அதற்கு வேண்டிய கடிதத் தாள்களையும் கண்டு பிடித்து உதவியிருக்கிறார்கள்.

2. மேலும் குட்டிச் சந்திரனையும் (Satallite) குட்டி கிரஹத்தையும் (Planet) உண்டுபண்ணி அதுகள் ஆகாயத்தில் முறையே பூமியையும் சூரியனையும் சுற்றும்படி செய்து இருக்கிறார்கள். இஃது ஒருவிதப் படைப்பு என்றே சொல்ல வேண்டும்.

3. படைப்பின் விதத்தைத் தற்கால மேல்நாட்டார்கள் ஒருவிதமாக விளக்கி இருக்கிறார்கள். அது நமது மாணிக்க வாசகரின் வாக்கைப்போல் இருக்கிறது. ஆதலால் அதைப் பார்ப்போம். அறிவுக்கு எட்டாத மிகப் பெரிய இமயமலை போல் அநேக கோடான கோடி மலைகள் அநேக கோடான கோடி சூரிய வெப்பத்தைக் கொண்டு கற்குழம்பாகி வெகு வேகமாகச் சுழன்றன. அப்படிச் சுழலும்போது மேல்பக்கத்தில் இருந்த கற்குழம்பு சிதறி வெகுதூரத்துக்கு அப்பால் (அதாவது லட்சாதி லட்சம் மைல்களுக்கு அப்பால்) பல துண்டுகளாய்ப் போய் விழுந்து மூலக் கற்குழம்பைச் சுற்ற ஆரம்பித்தன. நாளடைவில் குளிர்ந்து கல்லாய் ஆயின. அந்தக் கற்களில் ஒன்றுதான் நமது உலகம். மாணிக்க வாசகரின் வாக்கு “கல்லாய் (கல் சிதறி மண்ணாய்) புல்லாய் பூடாய் புழுவாய் மரமாகி...” என்பது. (இந்தப் பாடலில் “ கல்லாய் ” என்ற சொல்லின் இடம் மாற்றப்பட்டு இருக்கிறது) மேலே சொல்லிய மூலக் கற்குழம்புதான் நமது சூரியன். அந்தக் கற் குழம்பு பிறகு ஒளி வீசும் ஆவியாய் மாறி விட்டது. (Incandescent Vapour)

4. மேல்சொல்லிய கல் எப்படிப் பலவிதமாக மாறியது என்பதைப் பற்றி Charles Darwin என்னும் மேல் நாட்டார் உயிர் வளர்ச்சி நூலாகப் பெரியதோர் நூலை எழுதி இருக்கிறார்.

5. தமிழர்களின் கொள்கைகளும் வரலாறுகளும் புதைந்து போய்விட்டன. அவைகள் மேலை யுகத்தைச் சேர்ந்தவை. அதாவது 5000 வருஷங்களுக்கு முற்பட்டவை. இதை மேல்நாட்டார் Sir Jhon Marshall அவர்கள் வெளிப் படுத்தினார்கள். (சிந்து நதிப் பள்ளத்தாக்குப் புதை பொருள் ஆராய்ச்சி) இதனால் தாழ்ந்து இருந்த தமிழர்களின் வரலாறு மேன்மை அடைந்து இருக்கிறது.

6. இதே ஆகஸ்டு இதழில் Prof. William James சொன்ன வார்த்தைகள் சைவ சித்தாந்தத்தின் உயிர் போன்றதாகும் என்று பெரியார், முரு. பழ. இரத்தினம் செட்டியார் அவர்கள் சொல்லி யிருக்கிறார்கள்.

7. மேல்நாட்டுக் கிறிஸ்துவப் பாதிரிமார்களில் சிலர் இந்தியாவுக்கு வந்து, இவ்விடத்தில் பெரு வியாதியால் (Leprosy) வருந்தும் மக்களைப் பார்த்து மனம் இரங்கி அவர்களுக்காக ஏற்படுத்திய விடுதிகளுக்குப் போய் அவர்களோடு இருந்து அவர்களுக்கு உதவி புரிந்து அதே வியாதி தங்களுக்கு ஒட்டிக்கொள்ள, அதைக் கவனியாமல் உதவி புரிந்து இருக்கிறார்கள்.

8. இதை எல்லாம் செய்து உதவிய மேல்நாட்டார்கள் போற்றுதலுக்கு உரியவர்கள் ஆவார்கள். அவர்களுக்குப் படைப்புக் கடவுளும் காக்கும் கடவுளும் அருள் புரியா ராக.

9. மேல் நாட்டார்கள் ஆணவமலத்தை ஒப்புக் கொண்டு இருக்கிறார்கள். அதற்கு ஒரு பழமொழியும் உண்டாக்கி இருக்கிறார்கள். அது "Pride goeth before a fall." மற்றதோர் இனிய வாக்கு "What you sow you reap."

1960 ஆகஸ்டு Supplement இம் மூன்றாவது பாராவில் "பாசம்" என்பதை "பசு" என்று கொள்ளவும்.

—தமிழ்க் தருடன்

——

# சமாஜ அறிக்கைகள்

30, 31-12-1960, 1-1-1961 தேதிகளில் இலங்கையில் நடத்தத் தீர்மானித்துள்ள சைவ சித்தாந்த மகா சமாஜ 55-ம் ஆண்டு நிறைவு விழாவில் கலந்துகொள்ள வேண்டுபவர்கள் தனித்தனியே Pass Port பெற்றுக் கொள்ள வேண்டுமென்று தெரிவித்துள்ள படியால், அவ் விழா மகா நாட்டிற்குச் செல்ல விரும்புவோர் கீழ்க்காணும் அலுவலகத்தில் ரூ. 5 (ஐந்து) கட்டணம் கட்டி ரசீது பெற்று C mmissioner of Police அலுவலகத்தில் அந்த ரசீதைக் கொடுத்து மனுத்தாள் பெற்று அவரவர்கள் Photo (படம்) ஒன்று வைத்து மனுச் செய்துகொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

மா. ப. தியாகராஜன், உதவிச் செயலர்.

ரூ. 5. செலுத்த வேண்டிய இடம் :—

Govt. of India,

Regional Office of Pass Port Emigration,

Mukkur Nallamuthu Chetty Street,

Madras-1

---

சைவப் புலவர் தேர்வுக்கும், இளஞ் சைவப் புலவர் தேர்வுக்கும் சேர விரும்புவோர் இம்மாதம் பணம் செலுத்தி விண்ணப்பத் தாள் பெற்றுக்கொள்ள வேண்டுகிறேன்.

இளஞ் சைவப் புலவர் தேர்வுக் கட்டணம் ரூ. 3.

சைவப் புலவர் தேர்வுக் கட்டணம் ரூ. 4.

இவ்வாண்டு முதன்மையாகத் தேர்ச்சி பெறுபவர்களுக்கு ரூ. 50க்குக் குறைவு படாமல் பரிசு அளிக்கப்படும். பலர் தேர்ச்சி பெறின் பரிசு பங்கிட்டு வழங்கப்படும்.

---

# திருநெறி விளக்கம்*

(மலர் 32 ; இதழ் 10 ; 349-ம் பக்கத் தொடர்ச்சி)

சிவாலய முனிவர்

அன்புநிறை குருவுருவு நீறு முண்மை
யஞ்செழுத்து மாலயமு மறிவுக் கெட்டா
இன்பமிகுஞ் சிவனுருவுஞ் சென்னி மீதே
யிருத்துமலர்ச் சேவடியும் இறைவன் றன்னைத்
துன்பமற வர்ச்சிக்குந் தொழிலுந் தொண்டர்
தொண்டரடித் தொண்டனெனுந் தொண்டில் வீடுந்
தென்பொதியிற் றிருமுனிபாற் பெற்ற வெங்கள்
சிவாலயமா முனிபாதஞ் சிந்தை செய்வாம். (11)

மருளினிலை கெடவ்ழுத காழி வேந்தர்
வாகீசர் வன்றொண்டர் வாதவூரர்
தெருளுநிலைச் செந்தமிழ்ப்பின் செல்வ தாகச்
சிவாகமத்தின் கருத்தகலாச் செய்தியாக
இருளுமலம் இரிக்கும்அருள் உண்மை யென்றும்
இன்பமலி பொருளுண்மை யென்று நோக்கி
யருளின்வழி தாவுரைப்பன் இதன்பேர் முத்திக்
கானதிரு நெறிவிளக்க மாகு மன்றே. (12)

சொன்மையொடு பொருண்மைபெறத் துணிந்தோர் போல
யானுமொரு நூல்வகுத்துச் சொல்வே னென்றல்
புன்மொழிக ளின்றியிதின் நன்மை தானும்
பொருந்தியிடு மாகருதிப் புடவி தன்னைப்
பன்முறையின் மணலொழியக் கழுவு வான்போற்
பண்டிதர் கடமையிர்க்கும் பரிசுண் டாகில்
என்மனமே எனக்குநகை தருமா லிந்நூற்
கவையடக்க மறந்துநா னியம்பிட் டேனே (13)

---

*தஞ்சைச் சரசுவதி மகால் நூல் நிலைய ஏட்டுப் பிரதிகளினின்று
எடுத்து வெளியிடப்பெறுவது.—தி. கி. நா.

அருளிலர்பால் இருளாகி யருளுடையோர்க் கொளியாய்
ஆடகமும் பணியும்போற் பேத மின்றி
இருள்வெளிபோற் பேதமறப் பலசொலொரு பொருளொருசொல்
எண்ணில்பொருள் போற்பேதா பேத மின்றி
புருவுயிர்நோக் கிரவியறி வொளிபோல வேறற்
றென்றலா வத்துவித மாயுயர்வே தாந்தத்
தெரிபொருளாய்ச் சிவதருமத் தால்விளையுஞ் சைவ
சித்தாந்த வுண்மையினைச் செப்ப லுற்றும். (14)

ஆருயிர்மூ வகைமூல மலத்தார் கன்ம
வாணவத்தார் மும்மலத்தார் அநாதி யாகப்
பார்வையெனப் பரனுருவாய் வந்து தெய்வப்
பார்வையினாற் பரிசத்தால் பரம வாக்கால்
ஓர்வரிய பாவனையால் ஓதுதலாலி யோகத்தால்
உபாதியொழித் துண்மை யான
சார்வுதரு நிருவாண மிருவகையா மிதுநற்
சத்தியமோ டசத்தியமாய்ச் சாற்று நூலே. (15)

மருவுமனு வர்ச்சனையோ கஞ்சமய விசேடம்
வருமுண்மை நிருவாணம் மந்திரங்கள் பதங்கள்
வருணமிகு புவனங்கள் தத்துவங்கள் கலைகண்
மன்னுதொகைவகைபதினொன் றெண்பத்தொன்றைம்
இருசதமோ டிருபத்து நாலாரு றைந்தின் [பத்தொன்(று)
னெய்துநெறி யறுவகையு மிழித்தொழிவி லின்பம்
பொருளிலுயிர் இருமையா வொருமையில் தற்போக்கிற்
புதுமையரு வநுபோகம் புணர்க்கு மன்றே. (16)

மன்னுசரி தாகிரியை யோக ஞானம்
வாய்ப்பதனுக் கேதுவதன் வழிநின் றோர்க்குத்
தன்னுலகு தன்னருகு தற்போ லீசன்
தருஞான மிருஞான மாகச் சாற்றும்
பன்னரிய பரஞானம் பரம ஞானம்
பற்றொழியப் பரம்பொருளாம் பரிசொன் றென்று
சொன்னபொரு டனைவிளங்கச் சொல்லா நிற்குஞ்
சுருதிசிவா கமமென்னச் சொல்வ ரன்றே. (17)

முற்சுருதி மிருதிசிவா கமமெதினும் இதைய
முதன்மூன் றுந் தெரித்தலதின் முதுபதிதான் முடிவில்
தற்பரமாய் அறிவுருவு தவிர்ந்துகுணங் குறிகள்
தாக்கின்றி யமலமாய்த் தனக்குநிக ரின்றி
யொற்கமறு பொருளாகி யுயிர்க்குயிரா யொன்ருய்
உணர்வரிதாய்ச் சுகாதீத உண்மையதாய் ஒழிவற்(று)
அற்புதமாய் அபேதருடன் பேதந்தமக் கரிதாய்
அத்துவிதற் கெளிதாகி யணுவாகி மகத்தாம். (18)

நண்ணுபரை யிச்சைதொழில் ஞான நல்க
நானது தனையுற்று நற்கருணை யுருவாய்
எண்ணருநா தாதியினை யெழுப்பியிட வந்த
எழிற்குடிலை யதோமாயை தனையேந்து வினையாற்
பண்ணியிடு தனுகரண புவன போகம்
பாலித்தங் கவையொடுக்கு மூர்த்திதனைப் பகரிற்
றிண்ணமுற நற்சகள நிட்களமென் றிதனைத்
தெளிந்துரைப்பர் சிவாகமநூற் றெளிந்து ளோரே.(19)

சுட்டறிவுக் கெட்டரிய தொன்மை யானும்
சொல்லுமடி நடுமுடிவு துடைத்த லானும்
மட்டறுசின் மயஞகி வளர்த லானும்
மதித்திடுவோர் வரமதிப்பின் மறைத லானும்
எட்டனையுஞ் சுகதுக்க மிலாமை யானும்
எவ்வுயிர்க்கு முயிராகி யிருத்த லானும்
வெட்டெனவே தனதிச்சை யான மேனி
விரும்பிடுவன் பெருங்கருணை விமலன்ருனே. (20)

செங்கமலத் தயன்படைக்கு முலக மெல்லாந்
திருமாலங் களிக்குமது தன்னைத் திர
எங்களரன் அழித்திடுவன் அதனு லந்த
இருவருமற் றிறைவனரு ளேவ லாகுஞ்
சங்கரன் சங்கரிக்கு முலகம் யாவுந்
தானடத்தும் விகாரமறத் தவனன் முன்னர்ப்
பங்கயங்க ளலர்ந்துமுகைத் துலர்ந்து வெல்லும்
பான்மையென மேன்மையதாப் பகர்வரன்றே. (21)

நாட்டியவைந் தொழிலிறைவன் அருள்விளையாட் டாக
நவின்றிடுயிர் பிறப்பி னணுகாமல் ஞான
வீட்டையருள் புரிவதற்குக் காரணமா மென்று
விளம்பிடுவ ரிறுதியினைப் பாற்றன் மெய்யிற்
கூட்டல்வினை தொலைத்தற்குத் திதிபோக மருத்தல்
கூறுமறைப் பினிதாக்கல் அருட்கழற்கே கூட்டி
வாட்டமற வநுபோகம் வளர்வித்தல் முன்னே
வகுத்தவையு மநுக்கிரக மெனவுரைப்பர் மதித்தே. (22)

அகணிதமா யழிவிலதாய் ஆணவத்தான் மறைப்புண்
டருவினைக்கா முருவெடுத்தங் கதுவதுவாய்க் கன்ம
வெகுவிதமுன் னுதரவழியா விருவினைகள் புரிந்து
மீள்வதுபோ வதுவாகி மேவுமல பாகத்
தகுதியினிற் றூரகமா மருளொளியான் முன்னைத்
தமமகற்றித் தாணுவினற் றுணிழல்சார்ந் தின்ப
மிகுதிபெறு மாறுயிரின் றெகுதிகளென் றென்றே
வேதமு மாகமந்தா னு விளம்பு மன்றே. (23)

ஒன்றாகி யொன்றுமிலாக் கேவலத்தின் மீளு
மூலவாத சேட்டைகளா யிருளையொளி யாக்குங்
குன்றாத கூரிருளாய்ச் செம்பகலாக் களிம்பின்
கொள்கையதாம் அக்கட்செவிக் கொடுவிடமே [போன்று
பொன்றாத தனிமூல மலமாகி யுயிரின்
போதமெலாந் தானாகிப் போதமற மறைத்து
நின்றாலு மிருபொருட்கு நிலையின்றி யருட்பால்
நீங்கிடு மாணவமென்று நிகழ்த்து நூலே. (24)

வெந்துரைரோ யாள னுடல் வெங்கனற்கோல் கொண்டு
வெதுப்புறுமக் காலையினில் மிகுபரிவா லுன்னை
முந்தியவன் கண்புதைக்கு நெறிநிகர்த்து விழிப்பால்
மூடியவெண் டுசிருளா திருளிக்கு முறைபோற்
சந்ததமும் பாகம்வர வுயிர்க்குமலஞ் செலுத்தும்
சார்பின் மலமென்றிடினும் தானலவாய் மறைத்து
வந்தநிலை யதுமாறித் திருவரு ளானாலும்
மறைப்பொழியா துயிர்க்காதி வாழ்வுதருமி கவே. (25)

ஓங்குபரா பரனருளால் குடிலையிலே நாதம்
உளவாகு மதிந்துவதி லுற்பவிக்கும் விந்துப்
பாங்கருநற் சதாசிவராஞ் சதாசிவர் பான்மகேசர்
பாலிப்ப ரவர்வித்தை மயங்கிடுவ ரியைந்திட்
டுங்கிவர்க ளவருமுண் டாயிடினு முன்னே
யெழுமென்ற விந்துவிலே சூக்குமை பைசந்தி
நீங்கலரு மத்திமைவை கரிவரு மென்றருளால்
நிகழ்த்திடுவர் பாசவலை நெகிழ்த்து ளோரே. (26)

மெய்யாதி நால்வகையாய் ஒன்றுக்கொன் றெவ்வா
வெகுவிதமா யேகமா விதனவிதன் றருவாய்
எய்யாமல் வினையிலுழல் ஆருயிர்க ளவைக்கும்
இருப்பாதி யசேதனமாய்ச் சலிப்பிலதாய்த் தனது
பொய்யாய நிலையனவும் பூரணமா யாவும்
போந்தடைவே புரிந்து பொருந்திவினை யென்றுஞ்
செய்யாத விருகாலைச் சேதனங்கட் கெல்லாஞ்
சேர்விடமாம் மாயையெனச் செப் புநூலே. (27)

சொல்லியவிம் மாயையெதற் கென்றுரைக்கிரைக்கில் ஐயம்
தோற்றுவதிற் கிடமின்றாம் துணைவனிட மென்றால்
புல்லியமெய்ச் சடஞ்சித்தில் உற்பவியா தென்றும்
பொருந்தியுளதேல் இறையேன் புகன்றவசத் தரு
செல்லுநெறி யதுவாகுஞ் சிவனுமிது வன்றிச் [வாய்ச்
செயும்வகையொன் றிலதாவன் சிவனசத்த னாகில்
அல்லல்தரு மாயையுமற் றவன்போல்அ னாதி
யதனைநடத் திடுந்தலைமை யதுகொடுத்த தன்றே. (28)

அனையவுரு வொருவகையாகா மன்மக்கள் மரார்அமரர்
அமரர்பசுக் காதியென வாக்கியதென் னாக்கம்
வினையின்வழி யென்னில்வினை யுளதாகில் இறையேன்
வினையசித்தா மதுதன்னை விளம்பிலுயிர் நுகர்ச்சி
யெனையவினை தருவுருவும் பிறப்பிற் பெறுமாற்றான்
எய்தும்வினைக் கானவுரு வென்றுரைக்கிற் சடமாந்
தனுவகையுந் தனக்கெனவொன் றறியா தானும்
சாரும்வகை யிலதென்று சாற்று நூலே. (29)

அளவிலிருண் மாயையினும் பரனுயிர்ப்பால் அணைத்தல்
ஆருயிர்கள் வினையருந்தற் காகிலதோ வினையோ
உளததுமுன் னுயிர்க்கென்னில் உயிரதுமுற் சுத்தம்
உறையலவென் றுயிரளவன்றே யிவையு முளவாம்
வினையுமிரு வினைமாயை விடுவதுபற் றுவதாம்
விடாதுமல மிதுமுதலாம் மும்மலமு நெற்கு
முனையிறேடு தவிடுமிபோ லியல்புயிர்கட் கென்று
மொழிந்திடுவர் பரசமயத் தொழிந்து ளோரே. (30)

மேவியவிம் மாயையினிற் கலைகாலம் நியதி
வித்தையுடன் ராகமிவை விளங்கியிடு மன்றத்
தேவர்தம்மா லுருத்திரரிற் றிகழ்கலையிற் பகுதி
திரிகுணமா மாங்காரம் புத்தியினிற் செனித்து
மூவகையாந் தைசதவை கிரியொடுபூ தாதி
மொழிதருசாத் துவிதகுண முயங்கியிடு மனமுந்
தாவில்செவி யாதியெனச் சாற்றிஞானேந் திரியம்
தானுமிகு தைசதத்திற் சாரு மன்றே. (31)

எண்ணியகன் மேந்திரிய மென்றுசொலப் பட்ட
விராசதமா வாக்காதி யெய்திடும் வைகரியின்
நண்ணிடுபூ தாதிதா மதத்தின்மாத் திரையான்
நவில்வுறுசத் தாதியினை நல்கியிடுஞ் சத்தக்
கண்ணதனில் வெளிப்பரிசங் காலுருவந் தன்னிற்
கனலிரதத் தேபுனற் கந்தத்தே தரையாம்
மண்ணிறுதிக் கலைமுதலா வந்தவகை மடங்கு
மாலயனு திகள்வடிவும் வந்தமைபோலொடுங்கும். (32)

தொல்குரம்பைக் காரணமாய்த் தொகையளவு படாத
துன்பமுட னின்பமாய்த் தோற்றமுடனிறு
மல்கியிடும் வழியதனு னித்த முமாகி
பன்னுயிர்க டொறுமருவிப் பின்ன மற்றுப்
பல்விதமா யுணர்வினைவு தொழிலாற் செய்யும்
பண்ணதாய்ப் புந்தியில்வந் தடையும்பான்மை
நல்வினைதீ வினையாகிக் கடைநாண் மாயை
நண்ணியுறு மிதுகன்ம நாட்டி லன்றே. (33)

(தொடரும்)

உ

# பாராட்டு விழாவும், மலர் வெளியீடும்

நமது சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் நெடு நாளைய பழம்பெருந் தலைவரும், சன்மார்க்க - சமய வளர்ச்சிக்காகவே தமது வாழ்நாள் முழுதும் பாடுபட்டு வருபவரும், வார வழிபாட்டு இயக்கத்தினைத் தொடங்கித் தமிழ்நாடெங்கணும் பரவச் செய்த பெருந்தகையாரும் ஆகிய சைவப் பெரியார் - உயர்திரு. **ச. சச்சிதானந்தம் பிள்ளை, B.A., L.T.** அவர்களின் செந்தமிழ்ச் சைவத் தொண்டுகளைப் பாராட்டி மகிழ்தற் பொருட்டு, வேலூர்த் தொரப்பாடிச் சன்மார்க்க சங்கத்தினர் சிறந்ததொரு விழாவினை அண்மையிற் கொண்டாட ஏற்பாடுகள் செய்துவருகின்றனர். அவ்விழாவின்கண் மலர் ஒன்றும் வெளியிடப்பட உள்ளது. ஆதலின், சமயம் சமுதாயம் சன்மார்க்கம் திருமுறைகள் கோயில் வழிபாடு, சமய தத்துவ உண்மைகள் போன்ற பொருள்களைக் குறித்து நல்ல கட்டுரைகளை அம்மலரின்கண் வெளியிடுதற்காக எழுதி யனுப்புமாறு சைவத் தமிழறிஞர்கள் அனைவரையும் வேண்டிக்கொள்ளுகின்றோம். நவம்பர் மாதம் 10 தேதிக்குள் கீழ்க்கண்ட முகவரிக்குக் கட்டுரைகள் வந்து சேருமாறு அனுப்பியுதவ வேண்டிக்கொள்ளுகின்றோம்.

வாரவழிபாட்டுக் கழகங்களை நடத்துபவர்கள் தத்தம் கழகங்களைப் பற்றிய விவரங்களையும் கீழ்க்கண்ட முகவரிக்குத் தெரிவித்தருள வேண்டுகின்றோம்.

வேலூர்த் தொரப்பாடி சன்மார்க்க சங்கம்,
c/o மேயர் அண்டு கம்பெனி (கெமிஸ்ட்ஸ்)
16, ஐயாபிள்ளை தெரு, சென்னை-3.

சாது அச்சுக்கூடம், சென்னை-4

திரு. சுந்தரேச ஐயாவும், திரு. சோமசுந்தரமும் திருமுறைப் பாராயணம் செய்தனர்.

மாதாந்தர வழிபாடு: சென்னைத் தியாகராய நகர்த் தருமையாதீனப் பிரசார நிலையத்தின் சார்பில் 2-10-60 ஞாயிறன்று காஞ்சிபுரத்தை அடுத்த திருக்குரங்கணில் முட்டம், திருமாகறல் என்னும் தலங்களில் மிகவும் சிறப்புற நடைபெற்றது. சைவ சித்தாந்த மகாசமாஜம், இராயப் பேட்டைப் பாலசுப்பிரமணிய பக்தஜன சபை, இராயபுரம் இறைபணிக் கழகம் முதலிய பல சமய சபைகள் கலந்து கொண்டன. சமாஜத் தலைவர் திரு. அ. சோமசுந்தரம் செட்டியார், எம்.ஏ., மேயர் கம்பெனி திரு. மாசிலாமணி முதலியார், காண்ட்ராக்டர் திரு. மாசிலாமணியார், சாரதி பிலிம்ஸ் திரு. என். இராமமூர்த்தி, டைரக்டர் திரு. சோமு, நடிகர் திரு. டி. பாலசுப்பிரமணியம், கயப்பாக்கம் திரு. சோமசுந்தரம் செட்டியார் முதலிய பெருமக்கள் பற்பலர் கலந்து கொண்டனர். திருக்குரங்கணில் முட்டத்தில் 500க்கு மேற்பட்ட மக்கள் வழிபாட்டிற் கலந்துகொண் டனர். 15-16 பஜனைக் கோஷ்டிகள் வந்திருந்தன. காஞ்சி புரம் துணை ஆவணப் பதிவாளர் திரு. ந. பெரியண்ணன் பி.ஏ., அவர்கள் வழிபாடு சிறப்பதற்காகச் செய்திருந்த ஏற்பாடு கள் மிகவும் பாராட்டத் தக்கனவாக இருந்தன. திருமா கறலில் அறங்காவலர் திரு. எம். டி. நடராஜ முதலியார் அவர்கள் வழிபாட்டைச் சிறப்புற நடத்திக் கொடுத்தார்கள். அங்குக் கூடிய சமயப் பேரவையில் திரு. ச. சிவகுமாரனார், திரு. க. வச்சிரவேல் முதலியார், திரு புலவர் முருகவேள் ஆகியோர் பேசினர். பின்னர் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் இரு தலங்களின் சிறப்பையும், அத் தலங்களுக்குரிய தேவாரத் திருப்பதிகங்களையும் குறித்துச் சிறந்ததொரு சொற்பொழிவாற்றி மகிழ்வித்தார் கள். சென்னையினின்று வழிபாட்டிற்காக வந்திருந்த அறுபதின்மர்க்கு மேற்பட்ட அன்பர்கள் அனைவர்க்கும் இனிய மாலைச்சிற்றுண்டியும் இரவு உணவும் காஞ்சிபுரம் ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாசர் ஆதீனத்தில், அதன் இடைக்கால அறங்காவலர் திரு. டி. சடகோப முதலியார் அவர்களின் சார்பில், முத்தமிழ் அச்சக உரிமையாளர் திரு. எஸ். காளப்ப முதலியார் அவர்களால் சிறந்த முறையில் வழங்கப்பெற்றது. வழிபாட்டுக் கூட்டம் நாளுக்கு நாள் சிறந்த முறையில் வளர்ந்து வருவது மகிழ்வதற்குரியது.

ஆண்டுவிழா: காஞ்சிபுரம் தக்கேசர் திருநெறிக் கழகத்தின் 17-ஆம் ஆண்டு நிறைவு விழா, 15-10-60 சனிக்கிழமை சித்தாந்த சிகாமணி திரு. க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ.,எல்.டி. அவர்கள் தலைமையில் நடைபெறும். அவ்விழாவின்கண், காஞ்சி நகராட்சி மன்றத் தலைவர் திரு. வி. கிருஷ்ணசாமி முதலியார் அவர்கள் தலைமையில், அண்மையில் இலங்கை சென்று சித்தாந்த சைவ விரிவுரைகள் ஆற்றி மீண்டமை பற்றியும், காஞ்சிப் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியர் பதவி ஏற்றமை குறித்தும் "சித்தாந்த சிகாமணி" அவர்களுக்கு மகிழ்ச்சிப் பாராட்டு விழா ஒன்றும் நிகழும். திரு. சோம. குமாரசாமி முதலியார், பி.ஏ.எல்.டி., திரு. க. கு. ஏகாம்பர முதலியார், திரு. வே. மு. பிரமீச முதலியார், திரு புலவர் முருகவேள், எம்.ஏ.,எம்.ஓ.எல். முதலிய பலர் கலந்து கொண்டு சிறப்பிப்பர்.

---



---

Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.